# *Taṉavaiciya ūḻiyaṉ*

## *Malar 1, itaḻ 18*

## *January 14, 1921*

Record no. 148

உ
சிவமயம்.
தந்திவிலாசம்-"Oolian" Regd, No. M. 1509. "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

வெள்ளி தோறும் வெளிவரும்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் க. காரைக்குடி ரௌத்திரி ஹூ தைமீ உஉ (கசு—க—ககூ௨க) இதழ் கஅ




## கண்டரமாணிக்கம்.

கண்டரமாணிக்கம் விவேகாநந்த சபைக் கட்டிடத்தில் நிகழும் மார்கழிமீ உகூஉ பிற்பகல் ஸ்ரீமாந் மெ. பெரி. மெய்யப்ப செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில், ஸ்ரீமாந். பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் ஸ்ரீமாந் பழனியப்ப செட்டியாரவர்களும் ஸ்ரீமாந் வயி. சு. ஷண்முகம் செட்டியாரவர்களும் உபந்நியசித்தார்கள். இரவு எட்டரை மணிக்குச் சபை நிறைவெய்தியது.

* * *

## கருங்குளம்.

உசஉகாலை ஊழியர் சங்கத்தார் கருங்குளம் சென்று அங்குள்ளவர்களைக்கலந்து பேசினார்கள். அங்கிருந்தவர்கள், சிலர் வெளியூர் சென்றிருப்பதால் அவர்கள் வந்தவுடன் கூடி முடிவுசெய்து தீர்மானத்தை ஆதரிப்பதாக, வாக்களித்துள்ளார்கள்.

* * *

## சொக்கநாதபுரம்.

உசஉமாலை இவ்வூரிலுள்ள நகரமடத்தில்கண்டரமாணிக்கம் ஸ்ரீமாந் வி. சா. காசி விஸ்வநாதன் செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில், ஸ்ரீமாந்களான மெ. நா. லெட்சுமணன் செட்டியாரவர்களும் வயி. சு. ஷண்முகஞ் செட்டியாரவர்களும் பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் கா. அரு. அருணாசலஞ்செட்டியாரவர்களும் உபந்நியசித்தார்கள். இரவு எட்டரை மணிக்குச் சபை நிறைவெய்தியது.

* * *

## நாச்சியார்புரம்.

உருஉமாலை ரு-மணிக்கு இவ்வூர் அம்மன்கோவில் சந்நிதியில் ஸ்ரீமாந் வ. கரு. முத்தையா செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில், ஸ்ரீமாந்களான வயி. சு. ஷண்முகஞ் செட்டியாரவர்களும் நா. அரு. அருணாசலஞ் செட்டியாரவர்களும் பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் சு. பழனியப்ப செட்டியாரவர்களும் உபந்நியசித்தார்கள்.

மேற்குறிப்பிட்டவூர்களிலெல்லாம் தைமீ உஉ கூடும்கூட்டத்தில் சங்கத்தின் தீர்மானங்களை அநுஷ்டிப்பதற்கு முடிவு செய்வதாக வாக்களித்துள்ளார்கள்.

தைமீ ௩உ முதல் பிரசாரவேலை திரும்பவும் ஆரம்பிக்கப்பெறும்.

## தனவைசியரே! நாம் தூங்குகின்றோம்.

"நாம் இப்பொழுது தூங்குகின்றோம்" என்பது யான் கூறாமலே தெரியும். வெள்ளம் வந்துவிட்டது; அணை கோலாது விட்டுவிட்டோம். இனியும் தூங்குவோமாயின், வெள்ளம் அடித்துக்கொண்டுபோய்விடும். "பணம்; பணம்;" என்னும்பணப் பேய் பிடித்த சுயநலப்புலிகளே நம் சமூகத்தில் அதிகமாகிவிட்டனர். வாலிபராயினும், முன்வருவீர்! சுயநலங்கருதாது ஜாதியபிமானத்தைக் கைக்கொள்ளுவோம்; மயக்குண்டு தூங்குதல் நியாயமன்று.

எவ்வகையாலும் சமூகம் முன்னேற்றமடையவேண்டுமெனக் கூசசலிடுவோம். ஊர் ஊராகவும் வீடு வீடாகவும் விசேஷ ஜனங்கள் கூடுமிடங்கட்கும் கல்வி யபிவிருத்தி முதலியன கோரி நிறுவியுள்ள சங்கங்கள் கல்லூரிகட்கும் செல்வோம். சென்று நம் கோரிக்கைகளை முறையிடுவோம். துண்டுப் பிரசுரங்களை அச்சிட்டு வெளியிடுவோம்.

தனவைசியர் சீர்திருத்தம் என்னும் கோவில் ஒன்று நிறுவுவோம். அங்கு நமக்கு எவ்விதசம்பந்தத்தையும் தண்டாதளிக்கும் தண்டாயுதபாணியை நாட்டுவோம். நம் வைசியமக்களைக் கூட்டுவோம். பல சீர்திருத்தங்களை நிறைவேற்றுவோம். தண்டாயுதபாணியைப் போற்றுவோம்.

லெ. இராமநாதன்,
காரியதரிசி, ஷண்முகவிலாச
வாசகசாலை, நெற்குப்பை.

## நமது சமூகம்.

நமது சமூகம் முற்காலத்தில் எவ்வளவோ மேன்மையுடன் துலங்கியது. மன்னர்க்கு மணிமுடி சூட்டும் மரபினராயிருந்தோம். ஐந்தாண்டுள்ள அணங்கை அரசன் எடுத்துச்சென்றதற்காகக் குலத்தோடும் மாண்ட குணத்தவர் வழியில் வந்தோம். மன்னன் மரகதவு வெள்ளிதனை வல்லிரவில் வாங்கிவிட, அதற்குப் பதிலாக, அக்கணமே பொற்கதவைப் பூட்டிப் புகழ்படைத்த செல்வர்களாயும் வீரர்களாயும் இருந்தோம். பாழடைந்த கோவில்களைப் பண்படுத்திப் பொதுதர்மத்தை நிலைநாட்டினோம். ஆங்கில அரசாட்சி வந்தபின்புகூட அளவிலா நன்மைகள்பலபுரிந்து, அறிஞர்போற்றும்படி வாழ்ந்தோம். நம் சமூகத்தார் வசிக்குமொரு ஊரில் அயினொருவன் நியாயமான சமன் கொண்டுவந்தாலுங்கூட உடையவரிடத்து சார்பாக்கமுடியாதாம். மிக்க கஷ்டமடைவானும். ஏன்? ஆளிருக்கு

மிடம் அறிவிக்கார்களாம். ஊரிலோருவன் ஓட்டுவீடு கட்டுவதற்காக முயற்சிப்பதைக் கண்டு அபராதம் கேட்டார்களாம். அவனும் அப்படியே அபராதம் கட்டியபின்னரே வீட்டையும் கட்டினனும். "என்ன ஐயா? வீடு கட்டுவதற்கு யாரேனும் அபராதம் கேட்பார்களா?" என்று யோஜிக்கலாம். காரணம் கேட்டால் "எல்லோரும் கூரை வீடுகளிலிருக்கும்போது, இவன் மட்டும் ஓட்டு வீடு கட்டினல், அபராதம் கட்டத்தான் வேண்டு"மென்பார்களாம். பாருங்கள்! எவ்வளவு ஒற்றுமை இப்பொழுது ஒற்றுமை ஒற்றும்-மை ஆகிவிட்டது.

அறுபது வருடங்கட்குமுன்கூடிய சேந்தணிக்கூட்டம் சிதறியவுடன் நாம் இச்சிர்கேடான நிலைக்கு-இக்கீழான நிலைக்கு-வந்து விட்டோம். இனிமேலும் நமக்கென்னவென்று நினைத்து இருந்துவிடுவோமானல், நமது சமூகத்தைக் கொலை செய்த பாவத்திற்கு ஆளாவோம்.

"திரைகடலோடியும் திரவியம்" தேடித் தாய்நாட்டில் தர்மஸ்தாபனங்கள் செய்யும் நல்லோரென்றும், சென்னைமாகாணத்தில் பணத்தில் இச்சமூகத்தாரே நிற்பவரென்றும், மிகுந்த நாணயஸ்தர்கள் நலமுடையோர்கள்நிறைந்தசமூகத்தாரென்றும் புகழப்படுகிறநாம், இப்பொழுதுள்ள குறைபாடுகளைக் குறைக்கவழிதேடாதவாளாயிருந்துவிடுவோமேயானல், வீண் செலவு செய்யும் வீணர்கள் நிறைந்த சமூகம்-கன்னியர்க்குக் காளையர் பலர் திண்டாடும் சமூகம் என்னும் கெட்ட பெயர்களால், பிறசமூகத்தாரால் அழைக்கப்பட்டு விடுவோம். ஆதலால், சகோதரர்களே! பெரியோர்களே!! சகோதரிகளே!!! நீங்கள்ஒவ்வொருவரும்மனம்வைத்து ஊரூராய்ச் சென்றுழைக்கும் உத்தம ஊழியசங்கத்தாரோடு ஒத்துழைத்துச் சீர்திருத்த முன்வாருங்கள். பணம் படைத்த பிரபுக்களே! நீங்களும் முன்வரவேண்டும். நீங்கள் தாம் இக்கஷ்டங்களை நம் சமூகத்தில் புகுவித்தவர்கள். உங்கள் வீட்டில் விசேஷங்கள்வந்தபொழுதுஅளவின்றிச் செலவுசெய்ததால், அதுவேயப்பையப் பங்காளிவீட்டு முறையாகிப் பணமிலாதோயும்கடன்வாங்கிச் செலவழிக்கும்படியும்-வீண் செலவு செய்யும்படியும் தூண்டிவிட்டது. இப்பொழுதும் நீங்கள் சிறுகச்சிறுகவாவது குறைத்துக்கொண்டே வந்தீர்களேயானல்,பெண்கட்குப் பணம்கொடுப்பதை நிறுத்திவிட்டீர்களேயானல், ஏழையர்பலர் வாயார வாழ்த்துவார்கள். மற்ற அறிஞர்களும் போற்றுவார்கள். பெண்ணுக்குப்பணம்வாங்கும் பேய்வழக்கமொழியும். உண்மைச்சீருதல்

தர்களாகவும் ஆவோம். இன்னும் தூங்கலாமா? வாலிபர்களே! வேலை செய்யவாருங்கள். பெரியோர்களே! பின்னின்று கேடுசூழாமல் ஆசிர்வாதம் புரியுங்கள். தரளமுதல்வன்.

## சோம்பல்உதவாது

சகோதரர்களே! சோம்பல், நாம் முயற்சியுடன்செய்யும்வேலையைக்கெடுக்கும். உடலுக்கு நோயை வருவிக்கும்.பலராலும் இகழப்பட்ட வார்த்தைகளுக்குட் படுத்தும். சோம்பலானது மானத்தைக் கெடுத்து அவமானத்தைக் கொடுக்கிறது. சோம்பல் தூக்கத்தைக் கொடுத்து எப்பொழுதும் நம்மைக்கெடச்செய்கிறது. சோம்பலினுல் நாம்எவ்வேலையையும் செய்ய அசக்தர்களாகவிருக்கிறோம்.

ஒரு மனிதனுக்குக் கலியுகத்தில் நூறுவயது ஏற்படுத்தப்பட்டுள்ளது. அதில் பகுதி (நூ௰) தூக்கத்திலழிந்துபோகிறது. பாலியத்திலும் கௌமாரத்திலும்இருபதுவயதுபலனின்றி ஒழிகிறது. இவை எழுபதும் போக மீதியிருப்பது முப்பதுவயதே. இம்முப்பதுவயதிலோ நமக்கு ஏற்படும் பிணிகள் பல. வீணேகழியுங்காலமும்வேறே; அருமையாகக்கிடைத்தவிம்மானிட வாழ்க்கையில் பலவிதத்திலும் நமக்கேற்பட்ட காலம் வீணே கழிந்தொழிகின்றன. இஃதின்னமாக, நமக்குக் கிடைத்திருக்கும் மீதி நாட்களிலேனும் நாம் சோம்பலற்று வேலைசெய்ய வேண்டுவதில்லையா? என்னே! பரிதாபம்!! எவ்வளவு உயர் நிலைமையிலிருந்தநமது சமூகம் இவ்வளவுதாழ்ந்த நிலைமையிலிருப்பது! நமக்கே வெட்கமாயிருக்க வில்லையா? நமது சமூகத்தில் எத்தனையோ சபைகளும் எத்தனையோ மேதாவிகளும்இருந்தும், இன்னும், சமூகத்திற்கு முன்னுழைக்க வராதிருப்பது எவ்வளவு விசனிக்கத்தக்க விஷயம்!! நமது சமூகத்தை நாமே சீர்திருத்திக்கொள்ளாவிட்டால், வேறு யார் வருவார்கள்? நாம் சோம்பலினுலேயே சீர்திருத்தமடையாதிருக்கிறோமென்று நான் துணிவாய்க் கூறுகிறேன். சகோதரர்களே! நாம் இனிமேலும் காலதாமதஞ் செய்யாமல் சோம்பலைத் தவிர்த்து ஊக்கத்துடன் முன்னுழைத்தால், முன்னேற்றமடைவோமென்பது நிச்சயம்.

சோ. அ. சோ. பழனியப்பன்,
மேலைச்சிவற்பட்டி.

## நேற்குப்பை.

மார்கழிமீ உ௬ உ

காலநிலை:—கதிரவன் தனது கதிர்களை நன்குவிரித்துவருகின்றான். பனி அதிகமாகவே பெய்கிறது.

வியாபாரம்:—கடைகளிலெல்லாம் விலை யேற்றமாகவே இருந்துவருகின்றது. தனவைசியப் பெண்மக்கள், வீதிகளில் இருந்து பதினைந்து இருபதுபேர்வரை திருவாதிரைத்தோசை வேவுக்கரும்புகளை விற்று வருகின்றனர்.

ரோட்டுகள்:—ஊருக்குள் உள்ள ரோட்டுகளெல்லாம் கருப்பஞ்சக்கை மயமே. நகரத்தாரில் பலர் வீதியிடங்களை லேசுலேசாய்ச் சேர்த்து வருகின்றனர்; கவனிப்பாரில்லை. தெக்கனூரிலிருந்து பொன்னமராவதிக்கு கரு. முத்து. குடும்பத்தார் போடும்ரோட்டுவேலை துரிதமாய் நடந்துவருகின்றது.

பனங்கிழங்கு:—முப்பது கூடைவரையும் தினசரிவருகின்றது. மேற்படி கிழங்கு விலை மதிக்கின்ற நம் பெண்களின் கூற்று சொல்லத்தரமன்று.

கசாப்புக்கடை:—பல ஜனங்களும் நடமாடுமிடத்திலே விற்கப்படுகின்றது. உத்தமர் போகவழியில்லை. நகரத்தார் உத்தரவால் மறுபுறம்விலக்கிவைத்தல்நலம். பொதுநலப்பிரியன்.

## பொது விஞ்ஞாபநம்.

இந்த ரௌத்திரி௵ தைமீ உ௬ உ ஸோமவாசரத்தன்று உதயத்திலே மஹோதய மஹா புண்ணிய காலம் வருகின்றது. இம்மஹிமையான தினம் அடிக்கடி வரமாட்டாது. திங்கட்கிழமையும் திருவோண நக்ஷத்திரமும் அமாவாஸ்யையும் வியதீபாத யோகமுமே ஒருங்குகூடுதல் அருமை. ஷெதினமோ யாவுங்கூடிவருவதால் ஹிந்துக்களென்றே தற்காலம் பெருவழக்கமாகத் தங்களை யழைத்துக் கொள்ள விரும்பும் சைவ சமயிகளுக்கும் வைஷ்ணவ சமயிகளுக்கும் விசேஷ கொண்டாட்ட தினமாக எண்ணப்படுகின்றது. இத்தினத்திற் புண்ணிய தீர்த்தஸ்நானம், இயன்றதானம் ஈசுவரவழிபாடு ஆதியவைகளைச் சிரத்தையோடும் புரிபவர்கள் அஸ்வமேத வாஜபேயாதிய யக்ஞங்கள்செய்துபெறும் பலத்தைப் பெறுவார்களென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஆனல், இத்தினங்களில், கங்கை பிரயாகை பாபநாசம் முதலிய தீர்த்தங்களிலும் சேது ஆகிசேதுவாகிய திருப்புல்லாணியிலும் அடியார்கள் பலர் சென்று தங்கள் தங்கள் தர்மங்களைப் புரிவார்கள.

அக்காலங்களில் வேண்டும் புகைபிரத (றயில்) வண்டிகளைப் பிரயாணிகள் வசதிக் கேற்றவாறு விடவும், தநுஷ்கோடியில் நோய்கள் பரவாதபடி ஸௌகர்யங்கள் செய்யவும், அரசாக்ஷியாரை நமது தேசாபிமானிகள் கேட்டுத் தக்க ஏற்பாடுசெய்ய வேண்டு மென்பதை யான் ஞாபகப்படுத்துகின்றேன்.

வ. மு. இரத்நேச்வரையன்.



# சமயப் பகுதி.

## மாட்டுப் பொங்கலும் மஞ்சி விரட்டலும்.

உத்தராயணம்அல்லது தைமாதம் பிறந்த இரண்டாந் தினமாகிய இன்றையத்தினமே மாட்டுப் பொங்கல் என்று அழைக்கப்படுகின்றது. இதுவும் இந்துக்களின் பரம்பரையாசாரமாக வந்து கொண்டிருக்கின்றது. இதை வைதிக நிஷ்டர்களும் அனுசரிக்கிறார்கள். இதைக் கோபூஜையென்று பெரியோர்சொல்வர். நேற்றைய தினமாகிய ஸங்கராந்தி சூர்ய பூஜையென்றும் அதற்கு முன் தினமாகிய போகி இந்திர பூஜை யென்றும் முன் வார சமயப்பகுதியில் குறிப்பிட்டுள்ளோம்.

கோபூஜை அல்லது மாட்டுப் பொங்கல் என்று சொல்லப்படுகிற இன்று, பெரியோர்கள் தமது கிருஹங்களிலுள்ள பசு முதலியவற்றை நன்றாய்க் குளிப்பாட்டி மஞ்சள் பூசி நெற்றிக்கு அலங்காரம் செய்தும் அதன் கொம்புகளைச்சீவி நல்ல வர்ணங்கள் தீட்டியும் அவற்றைச் சுத்தத்துடனும் உத்ஸாகத்துடனும் இருக்கும்படியாகச்சுத்தமான இடங்களில் கட்டிவைப்பார்கள். பிறகு, அவைகள் கட்டியிருக்கு மிடங்கட்குச் சமீபத்திலேயே பொங்கற்பானையை யலங்கரித்து வைத்துச் சமைத்துப்பூஜைசெய்துஅவற்றுக்கு உணவு இடுவார்கள். அவைகள் உண்டான பிறகு, புளிமஞ்சியென்று சொல்லப்படும் நார்களை அவற்றின் கழுத்திலும் கொம்புகளிலும்கட்டி, மாட்டுக்கொட்டத்தின் வெளியில் திருஷ்டி கழித்துவிட்டுக் காவல்கொட்டி, மாடுகளை யவிழ்த்து ஓட்டிவிடுவார்கள். அவைகளும் இதனைப் பார் ஆச்சரியமாகக்கண்டு பாய்ந்து பாய்ந்து ஓடி விளையாடும். இன்றைய தினம் அவைகள் எப்பயிர்களில் மேய்ந்தபோதிலும் அவற்றுக்குத் தீங்கொன்றும் செய்வது வழக்கமில்லை.

புளிமஞ்சி யென்பது சாதாரண ஜனங்கள் புளிச்சக்கிரையென்று சமைத்து உட்கொள்ளும் செடியின் கழிகளை ஜலத்தில் ஊறவைத்துச் சோறுநீக்கி யடித்து உலரவைத்த நாரேயாகும். இதனைத்தான் மஞ்சி யென்று சொல்வது. இந்நார்களை (மஞ்சிகளை)க்கட்டி மாடுகளைவிரட்டுவதே மஞ்சி விரட்டலாகும். இதனை மஞ்சு விரட்டு என்றும் சொல்கிறார்கள்.

இந்தத்தினத்தையொரு மங்கள தினமாகக் கொண்டு, நமக்குப் பலவிதத்திலும் நன்மைகளையே புரியக்கூடிய வைகளாகிய கோக்களையும் விருஷபங்களையும் பூஜிக்க வேண்டியது நமது பூர்விக ஆசாரமாகஇருந்து கொண்டிருக்க, நமது ஜனங்கள் இத்தினத்தைத் தமக்கொரு பந்தயத் தினமாகவும் கொண்டாட்டதினமாகவும்வைத்துக்கொண்டு பசுக்களையும் விருஷபங்களையும் பட்டினி போட்டுக் கோபம் பிறக்கும்படி செய்து அவற்றை விரட்டியோட்டிப் பாயச்செய்தும் ஜனங்களைப் பிடிக்கச்செய்தும் அனேக கொலைகளும் காயங்களும் கலகங்களும் உண்டாக்குகிறார்கள். இது மிகவும் விசனிக்கத்தக்க காரியம்.

மாடுபிடிப்பது நம் முன்னோரது வழக்கமாயினும் அதனை நடத்துவிக்கும் முறையிதுவன்று. அம்முறையைப் பின்னொருகால் இலக்கியஆதாரங்களுடன் எடுத்துக்காட்டுவோம்.

# சுகாதாரப் பகுதி.

## நோயணுகாவிதி.

(டாக்டர் ஸ்ரீமான் வி. ஆர். சுந்தரம் அவர்கள் எழுதுகிறார்:—

"பாலுண்போம் * *
* * * *
* * *
மூலஞ்சேர் கறி நுகரோம்
மூத்ததயிர் உண்போம்
முதநாளிற் சமைத்தகறி
அமுதெனினு மருந்தோம்.
ஞாலந்தான் வந்திடினும்
பசித்தொழிய வுண்ணோம்
நமனார்க்கிங் கேதுவகை
நாமிருக்கு மிடத்தே."

மூலஞ்சேர்கறிநுகரோம்:—

மூலரோகத்தையுண்டாக்கும் காய்கறிகளை யுண்ணப்படாது. காய்கறிகள் சாப்பிடுவதிலும் தேகக்கூறறிந்து புசிக்க வேண்டும் என்று கூறுகின்றார்.

மூத்ததயிர் உண்போம்:—

புளித்ததயிர் உண்ணவேண்டும் என்கிறார். இளையதயிர் என்பது புளிப்பில்லாததயிர் என்பதாகும். இளையதயிர் உண்டால், அக்கினிமந்தம் அஜீரணம் முதலிய நோய்கள் உண்டாகும்; ஆகலின், அதனை விலக்கிப் புளித்ததயிரைப் பகற்காலத்தில் அன்னத்துடன் கலந்து சாப்பிடுவது நலம். இராக்காலத்திலே தயிர் சேர்ப்பதுகூடாது. புளித்ததயிர் நல்ல ஆரோக்கியத்தைத் தரும். பித்தசாந்தியையும் ஜீரணத்தையும் கொடுக்கும். சிலர் தயிர் சாப்பிடாமலே இருந்து விடுகின்றனர். தயிர் நல்லசத்துடையதாகிய ஜீரணத்தைக்கொடுக்கக்கூடியதாகையால் முன்னொருசெய்யுளில் கூறியபடி, நீர் விட்டுப்பெருக்கியேனும் நாடோறும் பகற்காலத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

முதநாளிற் சமைத்தகறி அமுதெனினும் அருந்தோம்:—

முதல் நாள் சமைத்தகறி பதார்த்தங்களைச் சிலர் உண்கிறார்கள். அப்படிச் செய்வது கூடாது. அவையமிர்தத்துக்கு ஒப்பாயிருந்தாலும் உண்பது கூடாதென்று விலக்கியிருக்கின்றனர். ஏனெனில், அவை விஷத்தன்மையை யடைந்து விடுகின்றன; உடனே நோய்களை யுண்டாக்காவிட்டாலும், நாளடைவில் நோய்களை யுண்டாக்கும் என்பதில் தடையில்லை. கறி என்று பிரித்துப்பேசிவிட்டபடியால், முதல் நாள் சமைத்து ஜலம்விட்டுவைத்த சோறு உண்ணலாம். அதனல் பிரதிகூலமுண்டாகாதென்று நிச்சயித்திருக்கின்றார்கள். கறிகள் மாத்திரம் கூடாவென்பதாம். பழைய சோறுங் கெட்டிருந்தால் விலக்கிவிடத்தான் வேண்டும்.

ஞாலந்தான் வந்திடினும் பசித்தொழிய வுண்ணோம்.

இதுபசியுண்டாகாமல் புசிப்பதுகூடாது என்பதை வலியுறுத்தி நிற்கின்றது. நம்மவரிற் பெரும்பான்மையோர் இதனைக் கவனிப்பதேயில்லை. பசியிருந்தாலும் இல்லாவிட்டாலும் 'சாப்பாட்டு நேரம் ஆய்விட்டதா?' என்பதை மாத்திரம் கவனித்துக்கொண்டு சாப்பிட்டு விடுகிறார்கள். 'பசி யெடுத்திருக்கின்றதா?' என்று கவனித்துத்தான் உண்ணத்தொடங்கவேண்டும். சிலர் சாப்பிட்டவுடனே, சிலருடைய தாக்ஷிண்யத்திற்கு உட்பட்டு, சாப்பிடுகின்றனர். சிற்றுண்டிக்குஆசைப்பட்டுச் சிலர் பசிக்கு முன்பு சாப்பிடுவதுண்டு. இந்தச் சாப்பாடு இரைப்பையைக் கெடுக்கும். அஜீர்ணத்தை யதிகப்படுத்தும். மலத்தை யதிமாகத் தள்ளும். உடம்புக்குப்பலத்தைக் கொடுக்காது. சிலர் பசியில்லா திருந்தாலும், "இரவில் சும்மா—உண்ணாமல்—படுத்துக்கொள்வது கூடாதென்று" பிறர் சொல்வதைக்கேட்டு உண்பதுமுண்டு. இது மிகக்கெடுதல். இதனல் உடம்பில் வாயுமிகுந்து மலத்தில் கிருமிகள் ஏற்படும். வயிற்றில் புளிப்புண்டாகும். கைகால்களுக்கு அசக்தியும் வலியுமேற்படும். துர்ப்பலத்துக்கு இதுதான் காரணம். இதுபற்றிப் போதிக்க வந்த நாயனர்,

'அற்றால் அளவறிந் துண்க வஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்கு மாறு' என்றார். அதாவது முன்னுண்ட உணவானது வயிற்றில் ஜீர்ணமாய் அற்றுப்போன பிறகு, தனக்குத் தேவையுள்ள அளவின்படி உண்ணவேண்டுமென்று வலியுறுத்துகிறார். இப்படிச்சாப்பிட்டால் தேகத்தில் நோயணுகா திருப்பதுடன், ஆயுளும் விருத்தியாகும் என்பதைப்பற்றியே நாயனர் விரித்துரைக்கின்றார். அந்த அதிகாரத்தைப் படித்தறிந்து கொள்ளலாம்.

பிறகு, இனி, போஜன விதி என்று தொடங்கி எழுதுவோம். அப்போது இது விவரமாய் எழுதப்பெறும். ஒவ்வொரு மனிதனும் பெரியோர் வரைந்துள்ளவற்றை யநுசரித்து விலக்கியுள்ளதை நீக்கி நடப்பானுனல், நோய்களைத் தடுத்துச் சுகமாக வாழலாம். விதிவிலக்குகளைக் கவனியாமல் நடப்பதினால்தான் நோய்களுண்டாகின்றன. "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்." ஆகையால், எல்லோரும் கூடியவரையிற் கவனம் செலுத்தி நோயெனும்பகைவனுக்கு இடந்தராமல் தம்மைக் காத்துக்கொள்ள வேண்டியது அவரவர் கடமையாகும்.

காளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்றென்
செயும்! குமரேசர் இரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி தை-மீ உ-உ

## இந்தியவியாபாரிகளின் நிலை.

க

ஐரோப்பியர் அமெரிக்கர் ஜப்பானியர் முதலிய பிற நாட்டினர் யாவரும் தங்கள் தேசத்தி லுண்டாக்கப்படும் பொருள்களையேவியாபாரஞ்செய்கின்றனர். வெளிநாடுகளில் சென்றிருந்தாலும், தங்கள் நாட்டுப் பொருள்களைத்தான்வரவழைத்து வியாபாரஞ் செய்கின்றனர். இந்திய வியாபாரிகளோ, இந்தியாவிலிருந்தாலும்வெளி நாடுகட்குச் சென்றாலும் அந்நிய நாட்டுச் சரக்குகளையே வாங்கி விற்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். மூலப்பொருள் ஏராளமாகக்கிடைத்தாலும், அவைகளைத்தொழிற்படுத்த முடியாமல் மூட்டைகட்டி வெளிநாடுகட்கு அனுப்பிவிட்டு, அவைகள் சாமான்களாக மாற்றப்பட்டு வரும் போது, பை பையாக ரூபாய்கொடுத்து வாங்கத் தயாராயிருக்கிறோம். ஒரு தேசமானது பொருளாதாரத்தில் சிறந்து விளங்கவேண்டுமானால், தொழிலும் வியாபாரமும் அதன் சுவாதீனத்திலிருத்தல் வேண்டும். உழுது உழுது விளைவைத்த பொருளை ஐரோப்பிய வியாபாரிகளிடம் விற்றுவிட்டு அதேபொருளுக்கு பத்துமடங்கு அதிகமான விலையைக் கொடுத்து வாங்குகிறோம். இந்த நிலைமையிருக்குமட்டும் இந்தியாவுக்குத்தரித்திரநிலை சாஸ்வதமாகத்தான் இருக்கும். இந்தியாவின் செல்வமும் தரித்திரமும், ஐரோப்பிய வியாபாரிகளின் கையிலிருக்கின்றன. இந்தியாவில் விளையும் பொருள்களை வாங்குவது அவர்களாதலால், கொள்முதல் செய்யவேண்டிய காலத்தில் விலையை இறக்கிக் கொள்முதல் செய்வதைப்பலர் அறிந்தேயிருப்பர். அந்த விலைக்குக்கொடுக்க முடியாதென்று சொல்லி நிறுத்தி வைக்க நமக்குப் போதிய பலமில்லை. இது கிடக்க, இப்பொழுது ஐரோப்பிய வியாபாரிகள் ஒரு பெருமோசம் செய்திருக்கிறார்கள்.

நமதுநாட்டார்சிலவருஷங்களாகத் தேசிய உணர்ச்சியற்றுக் கேவலம் டம்பம்ஒன்றையேகருதி வாழஆரம்பித்து, அந்நிய நாட்டிலிருந்து வரும் பகட்டான பலபொருள்களை வாங்கி உபயோகித்துவரவே, நாளேற அந்த அநாவசியப் பொருளெல்லாம் கட்டாயப்பொருளாகி, இப்போதுஅவைகளில்லாவிட்டால் நித்திய வாழ்க்கை கூட நடைபெறாது போலிருக்கிறது. இந்த நிலையேற்படவே இந்திய வியாபாரிகளும் அந்நியநாட்டுப் பொருள்களையே வாங்கி வியாபாரஞ் செய்ய ஆரம்பித்தனர். அந்த வியாபாரம் எவ்வளவு அதிகப்படுகிறதோ அவ்வளவு, தேசத்தில்வியாபாரம் வளர்கிறதென்று கருதினர். இந்த அந்நியச் சரக்கு எவ்வளவு அதிகமாக வியாபாரஞ் செய்யப்படுகிறதோ அவ்வளவு தூரம் நமது நாடு கொலைசெய்யப்படுகிற தென்பதை உணரவில்லை. இந்திய வியாபாரிகள், இந்தியஜனங்களின் உபயோகத்திற்காக அந்நிய நாடுகளிலிருந்து வரும் பொருள்களுக்கிடையில் அந்துகிற துனிகளை நக்கி மகிழ்கின்றனர். ஒன்றைஒன்று தின்று ஒடுங்கும் புழுக்களைப்போல் அந்நியச் சரக்குகளைக் கோடி கோடியாகவரவழைத்து இந்தியரின்பணத்தைப் பிடுங்கி வெளி நாடுகளுக்குக் கொடுத்து வந்தனர் இந்திய வியாபாரிகள். மற்ற தேசத்தினர், தங்கள் நாட்டிற் செய்யப்படும் பொருள்களை விற்பதற்கு இந்தியா ஒரு சந்தையென்று கருதியிருக்கின்றனர்.

இந்த நிலையில் மற்ற நாட்டு வியாபாரிகள் இந்திய வியாபாரிகளை வியாபாரிகளென்றே மதிக்கவில்லை. தன் மதிப்பற்ற இந்திய வியாபாரிகள் அவர்களோடுமற்றவழிகளில்போட்டி போட்டு நிற்கவிரும்பினுல் அதுசிரம சாத்ய மென்பதும் ஒருதலையாகும்.

ஐரோப்பிய யுத்தம் நடைபெற்ற காலத்தில் வியாபாரம் குன்றியிருந்தது. எல்லா நாட்டிலும் தேசிய உணர்ச்சி பரவியது. அப்படியே இந்தியாவிலும் ஒருவாறு பரவியது. அந்நிய நாட்டுச் சரக்கு விசேஷமாக இறக்குமதியாகவில்லை. வெளிநாடுகளிலுள்ள வியாபாரிகள் யுத்தத்திற்காக வரிமுதலியன கொடுத்தார்கள். வியாபாரம் நடவாததால் லாபம்பெறவும் முடியவில்லை.

இந்திய வியாபாரிகட்கும், யுத்தத்தால் அதிக வரிகள் கொடுத்ததோடு வியாபாரம் அதிகமாகச் செய்யமுடியாததால், லாபம் பெறவும் முடியவில்லை. ஆனால், ஐரோப்பிய வியாபாரிகள்கூடி யோசித்தார்கள். ஏமாந்தவன் தலையில் இத்தனை நஷ்டத்தையும்வைத்துவாங்கவேண்டுமென்றும், அதற்குத் தகுதியானவர் இந்திய வியாபாரிகளேயென்றும்தீர்மானித்தனர்போலும். கடகடவென்று பவுன் விலையை (நாணயம்) இறக்கினர்கள். பவுன்ஒன்றுக்கு ரூ. ௨0 வரை வந்துவிட்டது. "எல்லாச்சரக்கும்தயார். ஒப்பந்தம் செய்யலாம்" என்று இந்திய வியாபாரிகட்கு விளம்பரம்செய்தார்கள். இவர்கள் காய்ந்த மாடு கம்பில்விழுந்தாற்போல,"நான்முந்தி நான்முந்தி" யென்றுஒப்பந்தம்செய்து விட்டார்கள். முன் ஒரு பவுன் விற்றசாமான் இப்போது ஒன்றரைப் பவுனுக இருந்தாலும் ரூ. கஉ தான். ஆனபடியால் ஏராளமாக ஒப்பந்தம் செய்துவிட்டார்கள். ஒப்பந்தம்முழுமையும் ஆனவுடன் சரக்கை அனுப்பாமல் பவுனை கடு ரூபாயாக ஏற்றிவிட்டு, சரக்குகளை அனுப்பியிருக்கின்றனர். கஉ ரூபாய்க்கு ஒப்பந்தம் செய்த சரக்கு தற்போது உ௨ ரூபாய்க்கு அதிகமாகிறது. கடைத்தெருவில் கஉ ரூபாய்க்குவியாபாரஞ் செய்தசரக்கை உ௨ ரூபாய்க்குவிற்க முடியவில்லை. மேலும் கஉ லட்சம் ரூபாய் கையில் வைத்துக்கொண்டு, சரக்குக்கு ஒப்பந்தம் செய்த ஒரு வியாபாரிக்கு இன்னும் க0 லட்சம்



கடன் வாங்க வேண்டி நேர்ந்திருக்கிறது. அதற்காக நாணயத்தைக் காப்பாற்றும் பொருட்டு கையிலிருக்கிற சரக்கை மொட்டை விலையாக நோக்கம்போல் விற்க வேண்டியிருக்கிறது. இதனாலும் இந்திய வியாபாரிகட்கு ஏராளமான நஷ்டமுண்டாகி யிருக்கிறது.

## மலாய் நாட்டில் அரிசிக் கட்டுப்பாடு.

மலாய் நாட்டில் அரிசி விளைவு விசேஷமாக இல்லாதபடியால் அங்குக் குடியேறிய ஜனங்கள் மிகக் கஷ்டப்பட்டார்கள். ஆனால், இப்போது பர்மா அரிசிக் கண்ட்ரோல் எடுக்கப்பட்டு விட்டது. எவ்வளவு அரிசி வேண்டுமானாலும் மலாய் நாட்டில் வந்து இறங்கலாம். அவரெல்லாம் அரிசிமூட்டையாக அடுக்கிவிடலாம். அப்படியிருக்க, "நான் விட்டுவிட்டேன் கம்பளி மூட்டை விடவில்லை" யென்றபடி மலாய் கவர்ன்மெண்டார் இறக்கவோட்டேனென்று கூறுகிறார் ளென்று தகவல் எட்டுகிறது. மலாய் நாட்டு ஜனங்களைக்காப்பாற்றுவதற்கு அரசாங்கத்தினர் அரிசிக்கடையைத் தார்கள். இப்போது விற்று முதலானது போக ௭0,000 டன் அரிசி கையிருப்பிலிருக்கிறதாம். அது விற்கிற வரையில் வேறு அரிசி இறக்குமதி செய்வது மில்லையாம். விலையைக் குறைப்பது மில்லையாம். பர்மா அரிசி வேண்டிய அளவு கிடைக்கும். விலை கந்தம்ஒன்றுக்கு ௩0 காசு விற்கலாம். ஆனால், நான் விட்டுவிட்டேனென்று அரிசிக் கஷ்டம் சொன்னாலும்கவர்ன்மெண்டார் விடவில்லை. அதிக விலையில் வாங்கிக் கட்டிவைத்த அரிசியானபடியால் கையிலிருக்கிற எழுபதாயிரம் டன் அரிசியும் சுமார் ௭0 காசாக விற்று முடிந்த பிறகு; அரிசியிறக்குமதி செய்யலாமென்றுகருதுகிறார்களாம். நமக்கு இது வியப்பாக இருக்கிறது. அரிசிக் கடைக்காரரிடத்திலிருந்தபடி இந்த வியாபாரமிருக்குமானல் இப்போது ௭0 ஆயிரம் டன் அல்ல; எத்தனை ஆயிரம் டன் இருந்தாலும் விலை இறங்கித் தீர்ந்திருக்கு மல்லவா?

## எண்டிசைக் காட்சி.

### நமது பத்திரிகை.

சங்கராந்தியை முன்னிட்டு நமது பத்திரிகாலயத்திற்கு நேற்றும் இன்றும்விடு முறையாதலும், என்றாலும் நேயர்களின் திருப்தியை உத்தேசித்து நமது பத்திரிகை ௪ பக்கங்களோடு வெளி வருகிறது.

### அறியாமையா பொறாமையா

பம்பாய் மாகாணத்தில் கொல்ஹாபூர் ஜில்லாவிலுள்ள சாரதா பீடத்திலொரு ஸ்வாமிகளிருக்கிறர். அவர் நாகபுரிக் காங்கிரசுக்கு ஒரு கடிதமெழுதியிருக்கிறர். அதில் ஒத்துழையாமையை ஆதரிக்கிறாம். ஆனால் "மகாத்மா காந்தியடிகளுக்கு ஹிந்துமத சாஸ்திரங்களில் நம்பிக்கை யில்லாததால் அவர் எடுத்தகாரியம் ஒன்றும் நானது தேதி வரையில் கைகூடி வரவில்லை" யென்று தீட்டியிருக்கிறர். மகாத்மா காந்தியடிகளோ மதபத்தி யில்லாத அரசியல் உபாயமே மிலேயென்று அடிக்கடி கூறி, அரசியல் விஷயத்திலும் சமயபக்தியை யூட்டி, சாந்தமும் காருண்யமும் தெய்வ நம்பிக்கையும் கொண்டு உழைத்தல் வேண்டுமென்பதை நிதர்சனமாகக் காட்டுகிறரென்பதை யறியாதவரும் உண்டோ? மேலும் இந்த சுவாமிகள் குடியிருக்கும் கொல்ஹாபூர் ஜில்லாவிலேயே ஏழைக் குடிமக்களுக்காகப் பட்டினியிருந்து சொன்னபடி வரியை அந்தவருஷம் கட்டாதிருக்கும்படி செய்தாரென்பதை மட்டும் குறிப்பிட்டால் போதுமான தென்று நினைக்கிறோம். மகாத்மா நினைத்தபடி ஒவ்வொன்றிலும் வெற்றியே பெற்றிருக்கிறர். விஷயம் இப்படியிருக்க சுவாமிகள் மாறுபட்டுத் தீட்டுவது அறியாமையா? பொறாமையா?

### காரைக்குடி போஸ்டுமாஸ்டர்

இவ்வூரில் போஸ்ட் மாஸ்டராக இருந்த ஸ்ரீமான் $T.\ V.$ மதுரைப்பிள்ளையவர்கள் திடீரென்று திருப்பத்தூருக்கு மாற்றப்பட்டிருக்கிறரென் றறிகிறோம். இவரிங்கிருந்தவரையில் பொதுஜனங்கட்குத் திருப்தியாக போஸ்டாபீஸ் நடைபெறவில்லை. இனிமேலாவது இவர் திருப்பத்தூரிலுள்ள ஜனங்களுக்குத் திருப்தியாக நடந்துகொள்ளவேண்டுமென்று விரும்புகிறோம். போஸ்ட் மாஸ்டர் முதலியோர், ஜனங்கள் கார்டுக்குக் காலணா கொடுத்தால்தான் தமக்கு சம்பளங்கிடைக்குமென்பதையுணர்ந்து கொள்வார்களானல் எல்லாம் சரியாகி விடுமல்லவா?

## தந்திச் செய்தி.

### விடுமுறைநாளாதலால் தந்தி வரவில்லை.

### மதிப்புரை.

பஞ்சாயத்து:—இது ஒரு மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை. இது திருச்சியிலிருந்து வெளி வந்து கொண்டிருக்கிறது. இதனது பதினெண்ணாவது சஞ்சிகை வரப்பெற்றோம். இது ௩௨ பக்கங்கள்கொண்ட புத்தகரூபமாக வெளியாகிறது. இதனது அச்சும் அமைப்பும் விஷயங்களும் வர்த்தமானங்களும் மெச்சத் தகுந்தவைகளாகவிருக்கின்றன. "எல்லாக் கிராமங்களிலும் பஞ்சாயத்துக்கள் ஏற்பட வேண்டுமென்பதே இதன் நோக்கம். போர்கேன் முனிஸிபாலிடிகள் யூனியன்கள் காட்டு நிர்வாக சீர்ப்பாடுகள்பஞ்சாயத்துக்கள் முதலிய கிராம வாழ்க்கைக்குரிய விஷயங்களை விவரித்துக் கூறுவதே இதன் நோக்கம்" என்று இதன் அதிபராகிய எம் என் ஆர் சந்திரன் அவர்கள்குறிக்கிறர்கள். அக்குறிப்புப்படியே இதனுள் பொது ஜன உணர்ச்சிக்கு வேண்டிய விஷயங்களும் காங்கரஸ் நோக்கத்தை யநுசரித்த விஷயங்களும் பல அறிஞர்களால் எழுதப்பெற்றும் வெளி வருவதால், தேசாபிமானிகள் ஒவ்வொரு வீட்டிலும் இது அவசியம் வருவிக்கத்தகுந்தது. இதன் வருஷசந்தா ரூ. ௧—௪—0 வேண்டியோர் "மானேஜர் பஞ்சாயத்து சம்மர்ஹௌஸ் தென்னூர், திருச்சி" என்றெழுதிப்பெற்றுக்கொள்ளவும்.

### காரைக்குடி ரீடிங்ரூம் அண்டு யூனியன்கிளப்.

இந்த கிளப்பின் ஆதரவில் நாளது தைமீ ௪ உ(16.1-21)ஞாயிற்றுக்கிழமை மாலை ௬ மணிக்கு இக்கிளப்பின் மெம்பர்களாலும் மற்றவர்களாலும் நாகபுரியில் நடைபெற்ற காங்கிரஸ்மகாசபையின் தீர்மானம் ஆலோசிக்கப்பெறும். அவ்வமயம் அன்பர்கள் எல்லோரும் விஜயஞ் செய்து தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

கப சித சிதம்பரஞ்செட்டி
காரியதரிசி

### ஒரு பிழை திருத்தம்

௬ம் பக்கம் முதற்பத்தியில் கடைசிப்பாராவில்'௩டுஉ தி அ ச' என்றிருப்பதை "௨டுஉ தி அ ச" என்று திருத்திப்படித்துக்கொள்க. ப-ர்

## பொது வர்த்தமானம்.

அகில இந்திய மகாநாட்டுப் பஞ்சாயத்துகட்கு ஙடுO பிரதிநிதிகள் நியமிக்கப் பட்டிருக்கின்றனர்.

* * *

லார்டு ரீடிங் இந்தியாவின் ராஜப்பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருக்கின்றாரென்று "மார்னிங்போஸ்டு" பத்திரிகை எழுதுகின்றது.

* * *

இரங்கூனில் எக்ஸ்சேஞ்ச் வித்தியாசத்தினால் சில்லரை வியாபாரிகள் தவணைப்படி பணங் கட்டாதபடியால், சிலர் செட்டியவீட்டுக்குத் தீர்வை பேசுகிறார்கள்.

* * *

ஜனவரி கஉ இரவு, சென்னையில் மேரியன் மகாநாட்டுக் கொட்டகை தீப்பற்றி எரிந்துபோயிற்று. உயிர்ச் சேதமில்லை; பொருட்சேதம் அதிகமாம்.

* * *

நாகபுரி காங்கிரஸ் தீர்மானத்தை யநுசரித்து வடநாட்டு வக்கீல்களில் அநேகர் தமது வக்கில் தொழிலை விட்டுவிட்டுத் தேசசேவைக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

* * *

மேலைச்சிவற்பட்டி பஜனைமடத்தில் இவ்வாரம் பஜனை வெகு விமரிசையாக நடைபெற்றது. கண்டமாணிக்கம் உபாத்தியாயர் ஸ்ரீ மு. ராமசாமி சேர்வையவர்கள் அரிய திருப்பாடல்களைப் பாடினார்கள் என்று ஸ்ரீ சொ. பழனியப்பசெட்டியார் எழுதுகிறார்.

* * *

பர்மாவில், கள் அபின் சாராயம் காபி அந்நியநாட்டுரொட்டி முதலானவைகளை உபயோகிக்கக்கூடாதென்று பர்மா கிறிஸ்தவ வாலிப சங்கத்தார் பலமான பிரசாரம் செய்வதோடு சம்மதிப்பவரிடம் கையொப்பமும் வாங்குகிறார்களென்று நமது நிருபர் எழுதுகிறார்.

* * *

உவாக்கமா முனிசிபல் செக்ரடெரி சாராயங்குடித்ததை சங்கத்தார் கண்டித்தார்கள். அதற்கு அவர் மிகக்கோபித்து "நான் பெரியமனிதன், நீங்கள் இந்தமாதிரி சொல்வதை விட்டுவிடுங்கள். வெகுநாளைய அனுபவம் சாத்தியப்படா"தென்று சொல்லி கௌரவமில்லாமல் நடந்துகொண்டாராம்; அதற்காக சங்கத்தார் செக்ரடெரிமீது வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள்.

* * *

எவ்வளவு பெருந் தொகை யானாலும் செட்டிய வீட்டு உண்டியல்களுக்குப்பணம் பெற்றுக் கொண்டதாக செல்லெழுதிக்கொடுப்பது, சம்பள மில்லாமல் வேலை கற்றுக் கொள்ள வந்திருக்கிற சிறுவர்கள் தான். இது நீடித்த வழக்கமாகி விட்டது. இது ஒரு சமயத்தில் சிரமத்தைக் கொடுக்கவுங் கூடு மென்பதை முதலாளிகள் கவனித்தல் வேண்டு மென்று ரங்கூனிலிருந்தொரு நிருபர் எழுதுகிறார்.

* * *

தேவகோட்டை மாணவர் சங்கத்தின் மார்கழி மாதப் பொதுக்கூட்டம் சென்ற ஙடுவ தி. அ. ச. அ. சுப. பங்களாவில் ஸ்ரீமான் கரு. கி. சொர்ணநாதன் செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் நடைபெற்றது. பல மாணவர்கள் அரியபிரசங்கங்கள் செய்தார்கள். அக்கிராசனர் பல முக்கிய விஷயங்களைத் தக்க மேற்கோள்களுடன் முடிவுரை கூறினார்கள் என்று காரியதரிசி ஸ்ரீமான் D. V. முத்தையா செட்டியாரவர்கள் எழுதுகிறார்கள்.

## உள்ளூர் வர்த்தமானம்.

தபாலாபீஸ்:—இவ்வூர் தபாலாபிசுக்குப் போகிற ஜனங்களுக்கு இருப்பதற்கு எவ்விதமான சௌகரியமு மில்லாமையால் வெளித்தாழ்வாரத்தில் நாற்காலி (பெஞ்சு) போட்டும், வெளிச்சமில்லாமல் ஜனங்கள் தவறி விழுகின்றமையால் வெளித்தாழ்வாரத்திலும் வாயிற்படியிலும் விளக்குகள் போட்டும், ஸ்டாம்பு கவர் கார்டு முதலியவைகள் வேண்டியபோது கொடுப்பதற்கென்றே பிரத்தியேகமாக ஒரு சிப்பந்தியேற்படுத்தியும் ஆபிஸ் வேலைகளுக்கு குமாஸ்தாக்கள் போதாமையால் அவர்களை நியமித்தும், தபாலிலாகா அதிகாரிகள் சௌகர்யம் செய்யவேண்டியது கடமையாயிருக்க இப்படிக் கவனியாதிருக்கலாமா?

யூனியன்:—சுமார் ஒரு வருஷத்திற்குமுன் சாக்கடைத் தொட்டிவரி கிடையாது. சிலகாலமாக இந்தவரி யேற்படுத்தி யிருப்பது வருமானத்தைக்கருதியே தவிர பொதுஜன நன்மையைக்கருதியல்ல வென்பது விளங்குகிறது. வரி வசூலிப்பதில் மாத்திரம் உஷாராக இருக்கிறார்களே தவிர தொட்டிகளைச் சுத்தம் செய்வதில் அவ்வளவு சிரத்தையெடுத்துக்கொள்ளவில்லை. சிலதொட்டிகள் ஒருமாதம் ஒன்றரைமாதம் வரையிற்கூடசுத்தம் செய்யப்படாமலிருக்கின்றன. தண்ணீராறுப் பெருகி வீதிகளை அசுத்தம் செய்கிறது. இதனால் ஜனங்களுக்கு அநேக வியாதிகள் உண்டாகி தொந்தரவு செய்கின்றன. வீதிகளில் வெளிச்சம் போதாமையால் விளக்குகளின் தொகைகளை அதிகப்படுத்துவதோடுகூட வெளிச்சமும் காலைவரை யெரியும்படி செய்ய வேண்டும். இந்தயூனியன் அதிகாரிகள் கொஞ்சமேனும் கவனியாதிருப்பது ஜனங்களின் துரதிர்ஷ்டம்போலும். இனி மேலாவது கண் விழிப்பார்களாக.

வாசகசாலை:— இவ்வூர் வாசகசாலை (ரீடிங்ரூம்) யின்வருஷக்கொண்டாட்டம் நாளிது தைமாதம் கூ-ம் தேதிவாக்கில் நடைபெறும். அதற்கு சென்னை சுதேசமித்திரன் பத்திராதிபர் ஸ்ரீமாந் ஏ. அரங்கசாமி ஐயங்காரவர்கள் அக்கிராசனம் வகிப்பார்கள். ஸ்ரீமாங்கள் எஸ். சத்தியமூர்த்தி, தஞ்சாவூர் வர்த்தகமித்திரன் பத்திராதிபர் நடேச அய்யரவர்கள் இன்னும் மற்றுமரிய உபந்யாசகர்களும் பிரசங்கிப் பார்கள்.

S.N.S. Arunachalam Chettiar.

இந்துமதாபிமான ஸங்கம்.—மார்கழிமீ உசுஉ ஞாயிற்றுக் கிழமை மாலை ரு-மணிக்கு இந்தஸங்கத்தில் ஸ்ரீமான் மோ. வெ. கோவிந்தராஜ ஐயங்காரவர்கள் அக்கிராஸனத்தில் விவேகாநந்த ஜயந்தி யுத்ஸவம்கொண்டாடப் பெற்றது. அறிஞர்கள் உபந்யஸித்தார்கள். ஸ்ரீமான் சுப. முத்தையாசெட்டியாரவர்கள் "தெய்வமிகமேல்" என்னும் விஷயத்தையும், ஸ்ரீமாந் ராமகிருஷ்ண ஆச்சாரியார் "நாம் மஹான்களைப்போற்றுவதேன்" என்னும் விஷயத்தையும், இந்தஸங்கத்து ஸ்ரீராமகிருஷ்ணகலாசாலையாசிரியர் பிர்மஸ்ரீ சு. சிதம்பரம் ஐயரவர்கள் "ஸ்வாமிகள் சரித்திரசம்பந்தமான விஷயங்கள்" என்பதையும், சங்கத்து வெளியூர்ப் பிரசங்கியாராகிய பிர்மஸ்ரீ நெ. சி. விசுவநாத சாஸ்திரிகள் "நமது மதம்" என்னும் விஷயத்தையும் உபந்யசித்தார்கள். தலைவரவர்கள் முடிவுரை கூற சபை வெகு மங்களகரமாக நிறைவெய்தியது. பிறகு, ஸ்வாமிகள் திருவுருவப் படத்தை யலங்காரத்துடன் வண்டியிலேற்றி மேளவாத்தியங்களுடனும் வந்தேமாதர கோஷத்துடனும் ஊர்வலம் செய்வித்தார்கள். இரவுஒன்பதரை மணிவரையில் உத்ஸவம்வெகு உத்ஸாகத்துடன் கொண்டாடப் பெற்றது. கூட்டம்மிகுதி யாகவே இருந்தது. பெண்களும்விஜயம்செய்திருந்தனர்.

## கடைத்தெரு.

### இரங்கூன்.

மார்கழிமீ உஉஉ

| | |
|---|---|
| புது நெல்விலை | கசO |
| பழைய நெல் | கடுO |

உரூ-தவணைவட்டி முக்காலேஅரைக்காலும்அரைவீசம்.

மார்கழிமூ-நடப்புவட்டி முக்காலே மூன்றுவீசம்.

நாட்டுக்கடைக்கு உரூ-வட்டி ஒன்றே காலேஅரைக்கால்.

### கொழும்பு.

மார்கழிமீ உஉஉ

கொப்பரா ருகூO பவுண்டு கொண்ட பாரம் ஒன்றுக்கு ரூ. ககஉ

தேயிலை பவுண்டு உடு சதம் முதல் சO வரை

ஷெ நாள் " கடு முதல் உO வரை

தப்பர் " கநூ முதல் ருO வரை

தங்கம் பவுன் விலை கள முதல் ருO-,,

ஜாவா சீனி உ அந்தர் மூட்டை க. கித கூஅ

பாங்கி வட்டி ஒன்பது

### மதுரை.

| | | | | |
|---|---|---|---|---|
| சுச | நூல் விலை. | கூ | 0 | 0 |
| உஅ இ | | எ | அ | 0 |
| உகூ | | கூ | கச | 0 |
| உச | | கந | ச | 0 |
| உஉ இ | | கந | 0 | 0 |
| உ0 இ | | கந | கூ | 0 |
| உள்ளூர் நூல் நீமினி | | கடு | அ | 0 |
| பருக்கா | | ககூ | 0 | 0 |
| கறுப்பு | | எ | 0 | 0 |

### உள்ளூர்.

| | | | |
|---|---|---|---|
| மதராஸ்உண்டியலுக்குவட்டம் | 0 | அ | 0 |
| இரங்கூன் ஷெ | உ | 0 | 0 |



## மாதர்பகுதி.

### நீங்களும் மக்களல்லரோ?

தனவைசியச்சகோதரச்சிறுமிகளே!

சென்ற "மாதர்பகுதி" யில், உங்கள் பெற்றோர்கள், உங்களை நடாத்தும் அடாதசெயலைக் கண்டித்து எழுதினேன். அவர்களின் அடாச் செயலுக்கு, "நீங்கள் உடன்படுதல் ஆகாது" என்பதைப்பற்றிண்டுஎழுதப் புகுகின்றேன். "தந்தைசொன்மிக்க மந்திரமில்லை", "தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை" எனப்பெரியோர்கள் கூறியுள்ளபடி, மக்களாகப் பிறந்தோர் ஒவ்வொருவரும் தந்தை தாயர்களைத் தெய்வங்களாகப் பாவித்து அவர்கள் சொற்படிஒழுகவேண்டியது, இன்றியமையாததே யாகும்; ஆனால், மக்களைப்பெற்ற அவர்கள், மக்கட்குச் செய்ய வேண்டிய கடமையை உணர்ந்து அதன்படி செய்ய வேண்டுமேயன்றி, 'நாம் செய்வதற்கெல்லாம் நாம் பெற்றமக்கள்உட்பட வேண்டியவர்கள்தா' மென எண்ணி இழிதுறையிலிறங்கி மக்கட்குவரும் ஆபத்தை ஒரு சிறிதும் சிந்தியாது தங்கள்வருவாயிலேயே தவனத்தைச் செலுத்திக்கொண்டு செல்வார்களானால், அப்பொழுது நாம் செய்ய வேண்டிய கடமை என்ன? நம்மைப் பெற்ற தாய் தந்தையர்கள் அஞ்ஞானத்தால் தீயகாரியங்களைச் செய்து நிரகத்தாழ்வதற்கு நாமும் உடன்பட்டு அவர்களை எரிவாய் நிரயத்தாழ்த்துவது முறையாகாது. நம்மை அவர்கள் பெற்றதற்கு அவர்களை நன்னெறிக்கட்செலுத்துவதே நமது கடமை. நாம் அவர்கள் செய்புங்கெட்ட காரியங்களைத் தடுத்து அவர்களை நல்வழிப்படுத்துவதனால், அவர்களுக்குப் பெரும்புண்ணியத்தைச் சம்பாதித்துக் கொடுத்தவர்களாவோமேயன்றி, தந்தை தாய்ப் பிழைத்தவர்களாக மாட்டோம். இது முக்காலும் உண்மையாகும்.

சகோதரிகளே!

உங்களைப்பெற்றஅவர்கள், சிறுபிராயத்தில் உங்களை நன்றாக வளர்த்து, கல்வி முதலியன போதித்து, கல்வியறிவு ஒழுக்கம் நிரம்பப்பெற்ற சீரிய குணமுள்ள ஓர் வரனைத்தேடி, மாங்கல்யதாரணம் செய்துவைக்க வேண்டிய பொறுப்பு வாய்ந்தவர்களன்றோ? அங்ஙனம் ஆராய்ந்து செய்பவர் மிக மிகச் சிலரே. அவ்வாறுசெய்யாது, தங்கள் வருவாய் ஒன்றையே கருதி, மேற்கூறிய குணங்கள் இருப்பவனேனும்இல்லாதவனேனும் அவைகளைப் பற்றிக் கொஞ்சமேனும் சிந்தனையின்றி, அதிகப்பணம்தரக்கூடியஒருவனுக்குவிற்றுவிட்டால், அதற்கு நீங்கள் ஒருப்படுவதைக்காட்டிலும் அறியாமை வேறொன்று கிடையாது. நீங்கள் ஒருப்படாது நியாயவழிபற்றி நடப்பீர்களாயின், பெற்ற மாதா பிதாக்களைப் புனிதப் படுத்துவதுமன்றி நீங்களும் புனிதராவீர்கள். "பொருள் விழைந்தளித்த பூவைபுந் தாய்மை புண்கிலள் புழுக்கையே ஒப்பாள்" என்று திருவானைக்காப் புராணங் கூறுகின்றது. பொருளை விரும்பி ஒருவனுக்குக் கொடுத்த பெண்ணானவள், புனிதமடையமாட்டாள்; புழுக்கையையொப்பாள்; என்றால், சகோதரிகளே! நீங்கள் இதற்கு உடன்படலாமா? மறுமை ஒரு புறம் கிடக்க, இம்மையிலாவது உங்கட்கு ஏதாவது சுகவாழ்வு இருக்கின்றதா என்றுபார்ப்போம். உங்களை விலைக்கு வாங்கவருபவர்கள் பெரும்பணக்காரராயிருக்கமாட்டார்கள். பெரும்பணக்காரருக்கு, மற்றொரு பணக்காரர் தம்குழந்தை பிறந்தவுடனேயே தங்கள் குமாரியைக் கொண்டு வந்து தள்ளிவிடுவாரல்லவா? ஆனபடியினாலே, விலைக்குவிற்க அரும்பாடுபட்டுப் பெற்றுவளர்த்து வைத்திருக்கும் உங்கள் பெற்றோர்களிடம் உங்களை வாங்க வருபவர்கள், சாதாரணப் பணக்காரராகத் தாமே இருத்தல்கூடும். அதாவது நம் சமூகத்தாருக்குக்கொஞ்சப்பணம்; அது எவ்வளவு? குறைந்தது, இருபதினாயிரம்; இருபத்தையாயிரம். (இதற்குக் குறைந்தவர் தான் விவாகத்தைப்பற்றி நினைக்கவே முடியாதல்லவா?) இவர்கள் உங்களை விலைக்குவாங்குவதற்குக் கையிலிருக்கும் இருபத்தையாயிரத்தையும் உங்களின்கிரையமாக உங்கள் பெற்றோர்கட்குப் போடப்போதாது, கடனும் வாங்கிப் போட்டுவிட்டு உங்களைக் கொண்டு இருபத்தையாயிர ரூபாய் பணக்காரராகவிருந்த ஒருவர், ஓர் கன்னிகை கொண்ட கடன்காரராகிவிடுகின்றார். நீங்களோ உடனே கடன்காரனுக்குப் பார்யாகி விடுகின்றீர்கள். ஆனால், பணக்காரனாயிருந்த உங்கள் கணவனைக்கடன்காரனாக்கியது நீங்களே. உங்கள் பெற்றோர்களைப் புலால்விற்ற பாபத்திற் காளாக்கியது மன்றி, உங்கள் கணவர்களைக் கடன்காரர்களாக்கிய பாபத்திற்கும் ஆளாவீர்கள். உங்கட்கு இதில் என்ன இலாபம் இருக்கிறது? கடன் கொண்ட ஒருவனுக்கு வாழ்க்கைத் துணையாகவிருந்து, இவ்வுலகத்தில் என்ன இன்பத்தை அநுபவிக்க வியலும்? இவ்வுலகத்துப் பிறந்த சகல ஜீவர்களும் தங்கள் தங்கட்கேற்ப உலக இன்பத்தை நுகர, ஏழைச் சகோதரர்களாகிய நீங்கள் மாத்திரம் துன்பப்படப் பார்த்துக்கொண்டு வாளாவிருக்க ஒருப்படுவார்களா அறிவுடையோர்கள்? நீங்களும் மக்களல்லரோ? நீங்கள் நல்வாழ்க்கை வாழ்வதற்குக் குறுக்கே நின்று தடை செய்பவர்கள் உங்கள் மாதா பிதாக்களாகவிருந்தாலென்? வேறுயாராயிருந்தாலென்? "நாங்கள் மாடுகளா? எங்களை ஏன் விலை பேசுகின்றீர்கள்? ஐயோ! இதென்னகொடுமை !! நீங்கள் பெற்று வளர்த்து, கண்ணை இமை காப்பது போற் காப்பாற்றப் பெற்றவர்களல்லவா நாங்கள் உங்கள் செயல் மிக நன்று!! நன்று!!! பெற்றதகப்பனாகிய ஓர் ஆண்பிள்ளை, தான் பெற்ற பெண்ணை, வெட்கமின்றி விலைக்கு விற்பதா? பெற்றபெண்ணை விற்பதைக் காட்டிலும் ஈனத்தொழில்—மானமற்ற தொழில்—மனிதராகப் பிறந்தோர் நினைத்தற்கும் உரியதாகாத தொழில்—வேறுண்டோ? இத்தொழில் செய்வதைக் காட்டினும் இறந்துபடுவது நலமன்றோ? பெற்ற பெண்ணை விவாகஞ் செய்துவைக்கச் செயலின்றி, விலைக்கு விற்பவன் பெற்ற தந்தையாவனோ? இரக்கமென்பதே எட்டுணையுமின்றி, சரீரம் நொந்துபெற்றமகவை விலைக்குவிற்க ஒருப்படுவோர் பெற்றதாயாவரோ?" என்று ஏன் நீங்கள் கேட்டல் ஆகாது? நீங்கள் ஒருப்படாவிட்டால் உங்களை விற்றல் எப்படியியலும்? மாடுகளாகவிருந்தால் உதைத்துப் பிடித்துக்கொடுத்துவிடலாம். ஆறறிவுள்ள மக்கள் வகுப்பிற் சேர்ந்தவர்களல்லரோ நீங்கள்? இதற்கு நீங்கள்உடன்படுதல் கூடாது. நீங்கள் பிடிவாதமாகவிருந்தால் உங்களை ஒன்றுஞ் செய்ய அவர்களால் முடியாதென்பது நிச்சயம். அவர்கள் உங்களைக் கொண்டுபோய் நல்ல படுகுழியாகப் பார்த்துத் தள்ளிவிட்டுப்பணத்தைப் பெற்று சுகமாகவாழ்கிறார்கள். கஷ்டப்படுவது நீங்களும் உங்கள் கணவர்களுமன்றோ? இத்தகைய கயமைக் குணமுடைய பெற்றோர்களிடத்து நீங்கள் அங்ஙனம் நடந்து கொள்ளுதல் குற்றமாகாது என்று பன் முறையும் சத்தியமாகச் சொல்வேன். உங்களைப் பணம் பெற்று விவாகஞ் செய்வதற்கு, உங்கள்பெற்றோர்கள் பேசினார்களேயானால், நீங்கள் அதற்குச்சம்மதியாது பிடிவாதமாக விருந்து உறுதியைக் கைக்கொள்ளுங்கள். உங்களைக் கெஞ்சி உங்கள் நோக்கம்போல் அவர்கள் செய்து வைப்பார்கள் என்பதைப் பின்னர் அறிவீர்கள்.

ராய. சோக்கலிங்கம், காரைக்குடி.

### சந்தாவிபரம்.

| | | | |
|---|---|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ஊ ஒன்றுக்கு ... | ச | 0 | 0 |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்கு ஊ ஒன்றுக்கு... | ரு | 0 | 0 |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0 | க | அ |

### விளம்பர விகிதம்.

| | | | |
|---|---|---|---|
| மாதம் க-க்கு பத்தி க-க்கு ... | உ0 | 0 | 0 |
| ஷெ அரைப்பத்திக்கு ... | கக | 0 | 0 |

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்.
காரைக்குடி.

## ஸ்ரீ கௌரி சித்தௌஷதங்கள்

REGISTERED.



TRADE MARK.

ஸ்ரீ கௌரி ஜீவா மிருதஸஞ்சீவி லேகியம்.

தாது நஷ்டம், சொப்பனஸ்கலிதம், ஈம்புத்தளர்ச்சி முதலியவற்றைநீக்கி நல்லஇரத்த விர்த்தியையும், ஞாபகசக்தியையும், பசியையும் உண்டுபண்ணுவதில் இதற்கு இணை எதுவும் இல்லை. 40 வேளை மருந்து டப்பி 1-க்கு ரூ 2.

வி. பி. பி. சார்ஜ் அணா 4.

ஸ்ரீ கௌரி மலபந்த நிவாரணி.

இந்த மருந்தை இரவில் உணவுண்டபிறகு உபயோகித்தால் காலையில் வெகு சுகமாக மலப்பிரவர்த்தியாகும். உஷ்ணத்தைத் தணித்து மலச்சிக்கலை நீக்கி, ரோகங்களைத் தவாறு செய்யும். எனிமா வைத்துக் கொள்வதைக் காட்டிலும் இது சிறந்தது.

40-நாள் லேகியம் டப்பி அணா 12.

வி. பி. பி. சார்ஜ் அணா 4.

குறிப்பு:—வியாதியின் குணங்களை விபரமாக எழுதினுல், தகுந்த மருந்து அனுப்பப்படும்.

டாக்டர் V. R. சுந்தரம்,

363 பைகிராப்ட்ஸ் ரோட்

இராயப்பேட்டை, சென்னை.

---

## சாவரன் டானிக்மாத்திரைகள்.

அஜீரணம், மலபந்தம், தாது நஷ்டம், கைகால்பிடிப்பு, உப்புஸம், சுவாசகாசம், குன்மம், மேகரோகங்கள், இவைகளை உடனே குணப்படுத்தும். 15-நாள் மருந்துப்புட்டி 1க்கு

ரூ 2—0—0

## சாவரன் டயபெடிக்க்யூர்.

நீர் சம்பந்தமான வியாதிகளை ஒரேவாரத்தில் கண்டிப்பாய்க் குணப்படுத்தும். குணமில்லையென்ருல் பணம்வாபஸ்.

7-நாள் மருந்து

ரூ 5—0—0

சாவரன் அண்டு கம்பெனி.

19 கச்சாலீஸ்வரர் அக்ரகாரம்

மதராஸ்.

---

## ஷேட்டு - - - - கிளாஸ்கள்.

சுதேசி கிளாஸ்கள்! ஜப்பான் கிளாஸைப் போன்றதல்ல. மிகஉறுதியானது. விலையும் அதிகமில்லை. ஒரு டசனுக்குத் குறையாமல் வாங்குகிறவர்களுக்கும், வியாபாரிகட்கும் மிகக்குறைந்தவிலை.

சோ. முருகப்பன் கம்பனி.

காரைக்குடி.

---

## சாவரன் படைமருந்து

எப்பேற்பட்ட தீராத மேகப்படைகளையும், மேகரணங்களையும், வண்ணன் சிரங்கு பொறுக்கமுடியாத நமைச்சல்களையும் 24-மணி நேரத்தில் கண்டிப்பாய் குணப்படுத்தும். குணமில்லையென்றால், பணம் இரண்டத்தனை திருப்பிக்கொடுக்கப்படும்.

புட்டி 1-க்கு அணா 12

3-புட்டிக்கு

தபால் சார்ஜ் இனம்.

அநேக நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றிருக்கிறோம்.

சாவரன்

படைமருந்து கம்பெனி,

சர்ம வியாதிகளைக் குணப்படுத்துவதில் கீர்த்தி பெற்றவர்கள்.

மதராஸ்.

---

## நகைத்தொழிற்சாலை.

எங்களிடம் ஒரு தடவை வேலை கொடுத்துப்பாருங்கள். கூலிலும் அனுபோகம் பெற்றவர்கள். ககசுக்கூ மதுரையில் நடந்த கண்காக்ஷியில் நமது சென்னைக் கவர்னராகவிருந்த மாக்ஷிமைதங்கிய பெண்டேலண்ட்பிரபு அவர்களால் மெச்சிக்கப் பெற்றது. ஒவ்வொருநகையும்நமது சொந்தப்பார்வையில் செய்யக்கூடியது. எங்களிடத்தில்செய்யக்கூடிய நகைகளுக்கு காங்களே உத்திரவாதம் இருப்போம்.

விலாசம்:—

கு. கிருஷ்ணய்யர்.

தங்கம் பொன் நகை வேலை;

மால்வடம்போக்கித்தெரு.மதுரை.

---

## இங்கிலீஷ் கற்கவேண்டுமா ?

PATRON:—

சென்னை ஐக்கோர்ட் ஜட்ஜி

ஆனரபில் ஸதாசிவய்யரவர்கள்.

இதுவரையிற்கேளாத புதிய முறை. எளிதில் எவரும் கற்கலாகு மினியமுறை. மாதம் ரூபாய் ஒன்றே செலவு. எத்தொழிலாளரும் எங்கிருந்தும் கற்கலாம். தமிழோ மலையாளமோ சிறிதுதெரிந்தாற்போதும். மாதம் நாலு புத்தகங்களாக ஒரே வருஷம் படித்தால் பயனடையலாம். விபரங்களை ஓரணா ஸ்டாம்புடனெழுதினுல் பெறலாம். சேர்க்கைபீஸ் அணா நாலு முன்னனுப்பினுல் 1-முதல் 4-புஸ்தகங்கள் அப்ளிகேஷன் பாரத்துடன் ரூ 1—4—0க்கு வி. பி. யில் அனுப்பப்படும்.

ஆர். அச்சுதன் தம்பி

ப்ரொப்ரைட்டர்;

இங்கிலீஷ் கரஸ்பாண்டென்ஸ் ஸ்கூல்,

திருவனந்தபுரம்.

*N. B.*:—31—1—21-க்குள் ரூபாய் 7 முன்னநாககனுப்பினுல்,ஒருவருஷத்திய புஸ்தகங்கள்48-ம் புக்போஸ்டில்ரிஜிஸ்டர் செய்தனுப்பப்படும்.இச்சமயம்தவறினுல் புஸ்தகங்களுக்கு இரட்டிப்பு விலையாகும்.

---

## பெரியகம்பெனி! நாணயமானசரக்குகள்!

திருப்தியில்லாத சரக்குகள் திரும்பப் பெற்றுச் சுத்தமான பட்டு, சகாயவிலை, புதுமாதிரியான பட்டுப்புடவைகள், ரவிக்கைகள், சால்வைகள் வெண்பட்டு வேஷ்டிகள் தாவணிகள், மலையாளத்து முண்டுகள் முதலிய எல்லாப்பட்டு தினுசுகளும் கிடைக்கும். எந்தப்புதுமாதிரியும் நெய்து அனுப்பலாம்.

புடவைகள் 20 முதல்250ரூபாவரை கிடைக்கும். ரவிக்கைகள் 3 முதல் 15 ரூபா வரையில் கிடைக்கும். வெண்பட்டு வேஷ்டி 10 க்கு 6ஜோடி 20 முதல் 35 ரூபா வரையும் 9க்கு6ஜோடி 1 க்கு 18 முதல் 30 ரூபா வரை மற்றும் எல்லாவிவரங்களுக்கும் கேட்லாக் தருவித்துப்பார்த்துக் கொள்ளவும். கேட்லாக் இனும்

விலாசம்:—

*Manager.*

**Silk Pitamber Co.,**

*Dharaunagar Street,*

*BENARESCITY.*

மானேஜர்,

பட்டு பீதாம்பர கம்பெனி,

காசி.

---

சொ. முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில்அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.

